உ
சிவசிவ
திருச்சிற்றம்பலம்

# சிதம்பரம், நடராசர் திருக்கோயிலில் செங்குந்தர் மரபினர்களால் கொடியேற்றப்படுவதன் வரலாற்றுக் குறிப்பு நூல்



வெளியீடு :

**ப.குஞ்சிதபாத செங்குந்தர்,**
நாட்டாண்மைத்தலைவர்
அறம்காவல் குழுவினர் மற்றும் வடபகுதி
செங்குந்தர் மரபினர் - சிதம்பரம்





திருச்சிற்றம்பலம்

## விநாயகர் காப்பு

திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும் - உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தம் கை

*- கபிலதேவர்*

வானுலகும் மண்ணுலகும் வாழமறை வாழ
பான்னமதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞானமத ஐந்துகர மூன்றுவிழி நால்வா
யானைமுக னைப்பரவி அஞ்சலிசெய் கிற்பாம்

*- சேக்கிழார்*

## ஆறுமுகம் காப்பு

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின்செல்லேன் - பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே.

அஞ்சு முகந்தோன்றில் ஆறுமுகம் தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும் - நெஞ்சில்
ஒருகால் நினைக்கில் இருகாலும் தோன்றும்
முருகாஎன்று ஓதுவார் முன்

*- நக்கீரர்*

# உமாபதி சிவாசாரியார் அருளிய
# கொடிக்கவி

சந்தான குரவர்களுள் நான்காமவராக விளங்குபவர் உமாபதி சிவாசாரியார். இவர் தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரவருள் ஒருவர். ஒருநாள் வழக்கம்போல் நடராசப் பெருமானை வழிபாடு செய்து பகற்பொழுதில் பல்லக்கில் மனைக்குத் திரும்பிக் கொண்டிருந்தார். ஏவலர் சிலர்கைவிளக்கு ஏந்தி முன்பு சென்றனர். இதைக்கண்ட மறைஞானசம்பந்தர் (மூன்றாம் சந்தான குரவர்)

**பட்டகட்டையில் ஏறிப் பகற்குருடு போவதைப் பாருங்கள்**

என மொழிந்தார். அம்மொழி உமாபதிசிவனார் செவியில் விழுந்த அளவில் பல்லக்கினின்றும் இறங்கி மறைஞான சம்பந்தர் மலரடிகளில் விழுந்து வணங்கினார்.

பல்லக்கைப் பட்டகட்டை என்றும் பகலில் கைவிளக்கு முதலிய பரிவாரத்தால் விளைந்த ஆடம்பரத்தைப் பகற்குருடு என்றும் வெளிப்படையாகப் பொருள் கொள்ளுமாறு மறைஞானசம்பந்தர் கூறினாரேனும் பசை இல்லாத இவ்வுலகத்தினையே அவர் பட்டகட்டை எனக்குறித்தார் என்பதும். வேதம் ஆகமம் முதலிய கலையறிவுகள் எல்லாம் நிரம்பப் பெற்றும் ஞானம்பெறாதவர் என்பதனையே, பகற்குருடு எனக் குறித்தார் என்பதும் உமாபதியார் கொண்ட ஆழ்பொருள்களாயிருத்தல் வேண்டும். அவருடைய அகவிழிகளைத் திறந்து மெய்ஞ்ஞானம் பெறவேண்டும் என்ற தாகத்தை உண்டாக்கக் குருநாதருடைய இந்த மொழிகள் துணைபுரிந்தன.

தம்முடைய பகட்டான வாழ்வும் பிறவும் அகவாழ்விற்கு அணுவளவும் துணைபுரிய மாட்டா என்பதை உமாபதியார் உணரலானார்.

உமாபதியார்க்கு ஞான உபதேசம் புரிந்த மறைஞானசம்பந்தர், அவருடைய பக்குவ நிலையை அறியவும் உலகிற்கு உணர்த்தவும் திருவுளம் கொண்டார். தில்லையில்

ஆடைநெய்யும் செங்குந்தர் வாழும் திருவீதிக்குச் சென்றார். உமாபதியாரும் தன் ஆசிரியர் பின்னேயே அன்புடன் சென்றார். அத்தெருவில் ஆடைநெய்வோர் நூலின்பாவில் கஞ்சியேற்றும் பொழுது வழிந்தொழுகும் கூழை மறைஞானசம்பந்தர் தம் திருக்கரங்களில் ஏற்று உண்டார். அப்போது அவரது திருக்கைகளில் கூழ் ஒழுகிற்று. அக்கூழை ஆசிரியருடைய பரிகலசேடமாக (குருவருள் பிரசாதமாக)க் கருதி உமாபதியார் தம் கையேற்று உண்டார்.

மறைஞானசம்பந்தர் தம் மாணவரின் மனப்பண்பாட்டினை உணர்ந்து மகிழ்ந்தார். தாம் அருணந்தி சிவனாரிடம் பெற்ற உபதேசத்தை உமாபதியார்க்கு உணர்த்தியருளினார். சாத்திரநூல்கள் பலவற்றையும் உணர்த்தியருளினார். உமாபதியார் மெய்ஞ்ஞானியாக விளங்கினார்.

தில்லைவாழ் அந்தணர்களோ, உமாபதியார் அந்தணர்க்குரிய குலஒழுக்கத்தினைத் தவறினார் எனக்கொண்டு அவரைத் தம்மரபினின்றும் விலக்கிவிட்டனர். ஆனந்த நடராசப்பெருமானைத் தீண்டிப் பூசை செய்யும் பேற்றினை அவர் இழந்தார். தில்லைக்கு அருகில் சோழமன்னன் கொடுத்த ஒரு சிற்றூரில் திருமடம் ஒன்றில் தங்கித் தவம் பெருக்கி வரலாயினார். அங்குச் சிவபூசையும் நிட்டையும் புரிந்து பக்குவமுள்ள மாணவர்கட்குச் சிவஞான நூல்களை உபதேசித்து வரலாயினார். கொற்றவன் (அரசன்) வழங்கிய ஊர் ஆதலின் அப்பகுதி கொற்றவன்குடி என்றும், அங்கு வாழ்ந்து வந்த உமாபதியார் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார் என்றும் வழங்கப்பெற்றார்.

மூவாயிரம் அந்தணர்களில் ஒவ்வொருவர் ஒவ்வொரு நாளும் நடராசப் பெருமானுக்குப் பூசை செய்தல் மரபு. இதன்படி உமாபதியார்க்கு உரிய நாள் வந்தது. உமாபதியார் நடராசர் பெருமானை பூசை செய்ய ஆர்வமுடன் சென்ற போது பிற

அந்தணர்கள் தடுத்துவிட்டனர். வருத்தத்துடன் திருமடம் வந்த அவர் மனத்தாலேயே அன்றைய பூசையைச் செய்து முடித்தார்.

வேறு ஓர் அந்தணர் திருக்கோயிலில் பூசை செய்யப் புகுந்த போது, பூசைப் பெட்டகத்துள் பெருமானைக் காணாது திகைத்தார். அந்தணர்கள் செய்தியறிந்தனர். அவர்கள் யாவரும் கேட்ப இறைவன் அருள்வாக்காக, இன்றைய பூசனை முறையுடைய நம் அன்பன் உமாபதியிடம் சென்று, அவனுடைய பூசனையை ஏற்று நிற்கின்றோம் என்று அருளினார். இது உமாபதியார் உண்மை அன்பைப் பிறர் அறிய வாய்ப்பாயிற்று.

தில்லைக்கோயில் மடைப்பள்ளிக்கு விறகு கொண்டு வந்து தரும் பெற்றான் சாம்பானுக்கு இறைவன் கனவில் தோன்றி,

**அடியார்க்கு எளியவன், சிற்றம்பலவன்; கொற்றங்**
**குடியார்க்கு எழுதிய கைச்சீட்டு - படியின்மிசை**
**பெத்தான் சாம்பானுக்கு பேதமற தீக்கை செய்து**
**முத்தி கொடுக்க முறை.**

எனச் சீட்டுக்கவி தந்து, அதை உமாபதியாரிடம் தந்து முத்தி பெறுமாறு அருள்செய்தார். அவ்வண்ணமே அவ்வன்பர் உமாபதியாரிடம் ஓலையைத் தந்தார். உமாபதியார் நடராசரின் கருணையை நினைந்து மனம் உருகி, சத்தியோ நிர்வாணதை என்னும் தீட்சை தந்து அவரை முத்தி பெற வைத்தார். அவ்வன்பர் முத்திபெற்றதை நம்பாத உறவினர்கள் நம்புமாறு, அரசன் முன்னிலையில், தாம் செய்யும் சிவபூசை நீரால் நாளும் நனைந்து கோமுகி அருகில் முளைத்திருந்த முள்ளிச்செடிக்கு அத்தீட்சை தந்து ஒளிமயமாக மாறி முத்தி பெறச்செய்தருளினார்.

தில்லைத் திருக்கோயில் பெருவிழாக்காலம் வந்தது. கொடி உயர்த்தி விழாவைத் தொடங்குவது ஆகம வழக்கு. அந்தணர்கள் கொடியேற்ற முயன்றபோது கொடி மேலே ஏறாது நின்றுவிட்டது. இறைவன் அருள்வாக்கு, உமாபதி வந்தாலே கொடி ஏறும் என ஒலித்தது. அந்தணர்கள் உமாபதியாரை

மரியாதையோடு அழைத்து வந்தனர்.

உமாபதியார் அங்கு வந்து, திருவருளை நினைத்து நான்கு பாடல்களை அருளினார். அவ்வளவில் தானே கொடி ஏறி அருளியது. இப்பாடல்கள் கொடியேறுவதற்காக அருளப்பட்ட கவியாதலின் கொடிக்கவி எனப் பெயர்பெற்றது. இதனைக் கொடிப்பாட்டு என்றும் கூறுவர். இந்நூலில் முதற்பாடல் கட்டளைக்கலித்துறையில் அமைந்தது. ஏனைய 3 பாடல்கள் வெண்பா யாப்பில் அமைந்தவை. மிகச் சுருங்கிய நூலாயினும் உயிர் ஈடேறுவதற்கென ஆசிரியர் தம் கருணையால் அருளப்பெற்றது ஆதலின் இந்நூல் படித்துப் பயன்பெறதக்கதாகும். இது 14 சைவ சாத்திர நூல்களுள் ஒன்றாக விளங்குகிறது.

தில்லைவாழ் அந்தணர்கள், உமாபதி சிவத்தைச் சாதி விலக்கு செய்து வைத்த நிலையில் செங்குந்தர்கள் தாம் வார்த்த கூழை உண்ட மறைஞானசம்பந்தரின் எச்சில் பிரசாதத்தை உண்டதனால் தம் சாதியில் ஒருவராக மதித்தனர். எனவே கொற்றவன்குடி முதலியார் எனப் போற்றினர். மேலும் உமாபதியார் கொடிக்கவி அருளியபோது செங்குந்தர்கள் உடனிருந்துள்ளனர்.

**செய்யும் தொழிலெல்லாம் சீர்தூக்கிப் பார்க்குங்கால்**
**நெய்யும் தொழிலுக்கு நிகரில்லை**

என்பர் ஆன்றோர். அத்தகைய மேன்மையான தொழிலைச் செய்துவரும் செங்குந்தர்களே இன்று முதல் நடராசப்பெருமானுடைய கொடியேற்று விழாவை நடத்தி வைக்கட்டும் என்று சிவாச்சாரியாரால் நியமிக்கப்பட்டபடி இந்நாள் வரையில் செங்குந்த மரபினர்களே கொடியேற்று விழாவை நடத்தி வருகின்றனர். அது தொடங்கி ஆண்டுதோறும் ஆனி, மார்கழி பெருவிழாக்களில் கொடியேற்றும் உரிமையைச் செங்குந்தர்கள் பெற்றுத் தொடர்ந்து செய்து வருகின்றனர்.

இதுவன்றி, கொடியேற்று விழாவை நடத்தி வைக்கும் செங்குந்த மரபினர் 1837-ஆம் ஆண்டு முதல் வைகாசித்திங்கள் பௌர்ணமி விசாகத்தன்று நடராசர் ஆலயத்திற்குள் உற்சவ மூர்த்தியாக விளங்கும் வள்ளி தெய்வயானையுடன் வீற்றிருக்கும்

முருகப்பெருமான் திருவுருவத்தை செங்குந்தர் பொது இடமான வடபகுதி நந்தவன மண்டபத்தில் எழுந்தருளச் செய்து சிறப்பு மண்டகப்படி செய்கிறார்கள். மாலையில் புதுப்பேட்டை வடக்குத்தெருவிலுள்ள விநாயகர் ஆலயத்தில் எழுந்தருளச் செய்து, மங்கல ஒலி முழங்க தீபாராதனையுடன் வீதியுலா செய்விக்கிறார்கள். இச்சிறப்புரிமையும் செங்குந்தர்களுக்கு மட்டுமே வழுங்கப்பெற்றிருப்பதை தில்லைக்கூத்தனே தங்களுக்கு அருளியதாக எண்ணி மகிழ்கின்றனர். இவ்விழாவும் செங்குந்த மரபினரால் இன்றளவும் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது.

## கொடியேற்றுதல் தத்துவம்

கொடியேற்றுதல் என்பது பற்றித் தத்துவக் கருத்தாக ஒன்று உரைப்பதுண்டு. கொடிமரத்தைச் சிவ வடிவமாகவும், கொடிச்சீலையை மறைப்புச் சக்தியாகவும், அதில் வரையப்பட்டுள்ள இடபத்தை உயிராகவும், அக்கொடிக்கயிற்றைப் பாசமாகவும் கூறுவர். எனவே தருப்பைக் கயிறாம் பாசத்தோடு இணைத்துள்ள கொடிச்சீலையில், இணைப்புண்டு கிடக்கும் உயிர், கொடிக்கயிறாகிய அருளின் துணைக்கொண்டு, கொடிமரமாகிய சிவத்தைச் சேர வேண்டும் என்பது இதன் உட்கருத்தாகும்.

## கொடிக்கவி

**ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம் : ஒன்று மேலிடில் ஒன்று**
**ஒளிக்கும் எனினும் இருள் அடராது, உள்ளுயிர்க்கு உயிராய்த்**
**தெளிக்கும் அறிவு திகழ்ந்து உள தேனும் திரிமலத்தே**
**குளிக்கும் உயிர், அருள்கூடும் படிகொடி கட்டினனே.**

### தெளிவுரை

சிவஞானத்திற்கும் ஆணவமலத்திற்கும் உயிராகிய இடம் ஒன்றேயாகும். இவற்றுள் ஒன்று மேம்படுங்கால் பிறிதொன்று மறையும். எனினும், ஆணவமலம் சிவஞானத்தைக்

கட்டுப்படுத்துவதில்லை. அனைத்துயிர்க்கும் உயிராய் அவற்றின் அறிவை விளக்குகின்ற சிவஞானம் முற்செய் தவத்தால் உயிரின்மாட்டுச் சிறிது விளங்கியிருப்பினும் அவ்வுயிர் ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களிலும் கட்டுண்டேநிற்கும். அவ்வாறு கட்டுண்டு நிற்கும் உயிர்களுக்குத் திருவருள் பொருந்துமாறு நான் இக்கொடியைக் கட்டுவன் என்பதாம்.

## இப்பாடல் உயிரின் குறிக்கோளை இயம்பியது

**பொருளாம் பொருள் ஏது? போது ஏது? கண் ஏது?**
**இருளாம் வெளி ஏது? இரவு ஏது? - அருளாளா**
**நீபுரவா வையமெலாம் நீ அறியக் கட்டினேன்**
**கோபுர வாசற் கொடி.**

**தெளிவுரை**

அருள் நிறைந்த பெருமானே பொருள்களில் என்றும் நிலைத்திருப்பதும் பிறவற்றை இயக்குவிப்பதும் ஆய பொருள் எது? அப்பொருளினின்றும் விளங்கும் ஒளி எது? அதன் துணையால் கண்டு மகிழும் கண் எது? அக்கண்ணிற்கு மறைப்பாகும் இருளாகின்ற வெளி எது? இரவு எது? நீ காக்கும் இவ்வுலகம் முழுவதும் நீயே சான்றாக இவற்றையெல்லாம் அறியுமாறு திருக்கோபுரவாயிலில் இக்கொடியைக் கட்டுவன் என்பதாம்.

## இப்பாடல் இறைவன் உயிர்க்கு அருளும் முறைமையைக் கூறியது.

**வாக்காலும் மிக்க மனத்தாலும் எக்காலும்**
**தாக்கால் உணர்வரிய தன்மையனை-நோக்கிப்**
**பிறித்தறிவு தம்மில் பிரியாமை தானே**
**குறிக்கும்அருள் நல்கக்கொடி.**

**தெளிவுரை**

எக்காலத்திலும் மிகுதியான சொற்களாலும், மனத்தாலும் எய்துதற்கரியனாயும், உயிர் தன் அறிவால் அடைதற்கரியனாயும் விளங்கும் தன்மையனாய் இறைவனை வேறாக ஆராய்ந்து பார்த்து அறிவிற்கறிவாய் அதனின்றும் பிரியாது விளங்கும் தகைமையை உலகத்தார் அறிந்து கொள்ளுமாறு இறைவன் திருவருள் சுரக்க இக்கொடியைக் கட்டுவன் என்பதாம்.

## இப்பாடல் திருவருளை வேண்டுதலாம்.

அஞ்செழுத்தும் எட்டெழுத்தும், ஆறெழுத்தும், நாலெழுத்தும்
பிஞ்செழுத்தும் மேலைப்பெருவெழுத்தும்-நெஞ்சமுத்திப்
பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
கூசாமற் காட்டக் கொடி

தெளிவுரை

சிவாயநம எனும் திருவைந்தெழுத்துக்களையும், ஓம்ஆம்ஔம் சிவாயநம எனும் எட்டெழுத்துக்களையும், ஓம் நம சிவாய எனும் ஆறெழுத்துக்களையும், ஓம் சிவாய என்னும் நால்எழுத்தக்களையும், முறையாக எண்ணி அதன் பயனாகப் பிஞ்செழுத்தாம் வகரமாகிய திருவருட்சத்தியையும், மேலான பெருவெழுத்தாம் சிகரமாகிய சிவத்தையும் தன்னுடைய மனத்தகத்து வைப்பின், அதன் விளைவால் பேசும் எழுத்தாகிய வகரமாம் அருட்சத்தி தன்னுடன் பேசா எழுத்தாகிய சிகரமாம் சிவத்தையும் மிகவும் எளிதாக உயிரின்கண் பதிவிக்கும். அவ்வாறு பதிவிப்பதற்காக இக்கொடியைக் கட்டுவன் என்பதாம்.

இப்பாடல் திருவைந்தெழுத்து விளக்கமாம்.

# பஞ்சபுராணப் பாடல் திரட்டு
## ஞாயிற்றுக்கிழமை

### 1. தேவாரம் - திருஞானசம்பந்தர்

அலையார் புனல்சூடி ஆகத்து ஒருபாகம்
மலையான் மகளோடு மகிழ்ந்தான் உலகேத்தச்
சிலையால் எயிலெய்தான் சிற்றம் பலம்தன்னைத்
தலையால் வணங்குவார் தலையா னார்களே

### 2. திருவாசகம் - மாணிக்கவாசகர்

உடையாள் உன்தன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும் இருப்ப தானால் அடியேனுன்
அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய் பொன்னம்பலத்தெம்
முடியா முதலே என்கருத்து முடியும் வண்ணம் முன்னின்றே

## 3.திருவிசைப்பா திருமாளிகைத்தேவர்

ஒளிவளர் விளக்கே உலப்பிலா வொன்றே
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே
சித்தத்துள் தித்திக்கும் தேனே
அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே
அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே

## 4. திருப்பல்லாண்டு சேந்தனார்

மன்னுக தில்லை! வளர்கநம் பத்தர்கள் வஞ்சகர் போயகல
பொன்னின்செய் மண்டபத் துள்ளே புகுந்து புவனியெல்லாம் விளங்க
அன்னநடை மடவாள் உமைகோன் அடியோ முக்கருள் புரிந்து
பின்னைப்பிறவி அறுக்க நெறிதந்த பித்தற்குப் பல்லாண்டு கூறுதுமே

## 5. பெரியபுராணம் சேக்கிழார்

மற்றுநீ வன்மை பேசி வன்தொண்டன் என்னும் நாமம்
பெற்றனை.. நமக்கும் அன்பில் பெருகிய சிறப்பின் மிக்க
அற்சனை பாட்டே ஆகும்; ஆதலால் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடுக என்றார் தூமறை பாடும் வாயார்

# திங்கள்கிழமை

## 1. தேவாரம் - திருஞானசம்பந்தர்

ஆடினாய் நறுசெய்யொடு பால்தயிர் அந்தணர் பிரியாத சிற்றம்பலம்
நாடினாய் இடமா நறுங்கொன்றை நயந்தவனே
பாடினாய் மறையோடு பல்கீதமும் பல்சடைப்பனி கால்கதிர் வெண்திங்கள்
சூடினாய் அருளாய் சுருங்க எம தொல்வினையே

## 2. திருவாசகம் - மாணிக்கவாசகர்

நல்காது ஒழியான் நமக்கென்றுன் நாமம் பிதற்றி நயனநீர்
மல்கா வாழ்த்தா வாய்குழறா வணங்கா மனத்தால் நினைந்துருகி
பல்கால் உன்னைப் பாவித்துப் பரவிப் பொன்னம்பலம் என்றே
ஒல்கா நிற்கும் உயிர்க்கிரங்கி அருளாய் என்னை உடையானே.

## 3. திருவிசைப்பா - சேந்தனார்

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக் கரையிலாக் கருணைமா கடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றஎம் சிவனைத் திருவீழி மிழலை வீற்றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டுகண்டு உள்ளம் குளிரஎன்
கண்குளிர்ந் தனவே

## 4. திருப்பல்லாண்டு - சேந்தனார்

மிண்டு மனத்தவர் போமின்கள்
மெய்யடியார்கள் விரைந்து வம்மின்
கொண்டும் கொடுத்தும் குடிகுடி
ஈசற்காட் செய்மின் குழாம்புகுந்து
அண்டம் கடந்த பொருள் அள
வில்லதோர் ஆனந்த வெள்ளப்பொருள்
பண்டும் இன்றும் என்றும் உள்ளபொருள்
என்றே பல்லாண்டு கூறுதுமே

## 5. பெரியபுராணம் - சேக்கிழார்

ஆதியாய் நடுவும் ஆகி அளவிலா அளவும் ஆகிச்
சோதியாய் உணர்வும் ஆகித் தோன்றிய பொருளும் ஆகிப்
பேதியா ஏகம் ஆகிப் பெண்ணுமாய் ஆணும் ஆகிப்
போதியா நிற்கும் தில்லைப் பொதுநடம் போற்றி ! போற்றி !

## செவ்வாய்க்கிழமை

### தேவாரம் - திருஞானசம்பந்தர்

ஆகந்தோய் அணிகொன்றையாய் அனல் அங்கையாய்
அமரர்க்கு அமரா உமை
பாகந்தோய் பகவா பலியேற்று உழல் பண்டரங்கா
மாகந்தோய் பொழில் மல்கு சிற்றம்பலம் மன்னினாய்
மழுவாளினாய் அழல்
நாகந்தோய் அரையாய் அடியாரை நண்ணா வினையே..

### 2. திருவாசகம் - மாணிக்கவாசகர்

இன்றெனக்கு அருளி இருள்கடிந்து உள்ளத்து எழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன் நீயலால் பிறிதுமற்று
இன்மை
சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாம்
திருப்பெருந்துறை உறைசிவனே
ஒன்றுநீ அல்லை அன்றி ஒன்றில்லை யாருன்னை அறியகிற் பாரே?

### 3. திருவிசைப்பா - கருவூர்த்தேவர்

பின்னுசெஞ் சடையும் பிறைதவழ் மொழுப்பும்
பெரியதம் கருணையும் காட்டி
அன்னைதேன் கலந்து இன்னமுது உகந்தளித்தாங்கு
அருள்புரி பரமர்தம் கோயில்
புன்னைதேன் சொரியும் பொழிலகம் குடைந்து
பொறிவரி வண்டினம் பாடும்
தென்னதேன் அரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
திருவளர் சிற்றம் பலமே

### 4. திருப்பல்லாண்டு - சேந்தனார்

நிட்டை யிலாவுடல் நீத்தென்னை ஆண்ட நிகரிலா வண்ணங்களும்
சிட்டன் சிவனடி யாரைச் சீராட்டும் திறங்களுமே சிந்தித்து
அட்ட மூர்த்திக்கென் அகம்நெக ஊறும் அமிர்தினுக்கு ஆலநிழல்
பட்டனுக்கு என்னைத் தன்பால்படுத் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே

### 5. பெரியபுராணம் - சேக்கிழார்

கற்பனை கடந்த சோதி கருணையே உருவம் ஆகி
அற்புதக் கோலநீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோம மாகும் திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடம்செய் கின்ற பூங்கழல் போற்றி! போற்றி!!

## புதன்கிழமை

### 1. தேவாரம் - திருநாவுக்கரசர்

பத்தனாய் பாட மாட்டேன் பரமனே பரம யோகீ
எத்தினால் பத்தி செய்கேன் என்னைநீ இகழ வேண்டா
முத்தனே முதல்வா தில்லை அம்பலத்து ஆடு கின்ற
அத்தா உன் ஆடல் காண்பான் அடியனேன் வந்த வாறே

### 2. திருவாசகம் - மாணிக்கவாசகர்

தந்தது உன்தன்னைக் கொண்டது என்தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்?
அந்தம் ஒன்று இல்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றது ஒன்று என்பால்?
சிந்தையே கோயில் கொண்ட எம்பெருமான்
திருப்பெருந்துறை உறைசிவனே
எந்தையே ஈசா ! உடல்இடம் கொண்டாய்
யான் இதற்கு இலன், ஓர் கைம்மாறே !

### 3. திருவிசைப்பா - பூந்துருத்தி நம்பிகாடநம்பி

கடியார் கணம்புல்லர் கண்ணப்பர் என்றுன
அடியார் அமருலகம் ஆளநீ ஆளாதே
முடியாமுத் தீவேள்வி மூவாயி ரவரொடும்
குடிவாழ்க்கை கொண்டுநீ குலாவிக்கூத்தாடினையே

### 4. திருப்பல்லாண்டு - சேந்தனார்

சொல்லாண்ட சுருதிப்பொருள் சோதித்த தூய்மனத் தொண்ட ருள்ளீர்
சில்லாண்டில் சிதையும் சிலதேவர் சிறுநெறி சேராமே
வில்லாண்ட கனகத் திரள்மேரு விடங்கன் விடைப்பாகன்
பல்லாண்டு என்னும் பதம்கடந் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே

### 5. பெரியபுராணம்-சேக்கிழார்

ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள
அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக் குணம்ஒரு மூன்றும்
திருந்துசாத் துவிகமே ஆக,
இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த
எல்லையில் தனிப்பெரும் கூத்தின்
வந்தபேர் இன்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்

## வியாழக்கிழமை

### 1. தேவாரம் - திருநாவுக்கரசர்

அல்லல் என்செயும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தம்தான் என்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம்பல வனார்க்கு
எல்லைஇல்லது ஓரடிமை பூண்டேனுக்கே

### 2. திருவாசகம்-மாணிக்கவாசகர்

பெரும்பெருமான் என்பிறவியை வேரறுத்துப் பெரும்பிச்சுத்
தரும் பெருமான் சதுரப்பெருமான் என்மனத்தின் உள்ளே
வரும்பெருமான் மலரோன்; நெடுமால் அறியாமல் நின்ற
அரும்பெருமான் உடையாய் அடியேன் உன் அடைக்கலமே

## 3. திருவிசைப்பா கண்டராதித்தர்

மானைப் புரையும் மடமென் நோக்கி மாமலை யாளோடும்
ஆனைஞ்சாடும் சென்னி மேலோர் அம்புலி சூடுமரன்
தேனைப் பாலைத் தில்லை மல்கு செம்பொனின் அம்பலத்துக்
கோனை ஞானக் கொழுந்து தன்னைக் கூடுவது என்றுகொலோ?

## 4. திருப்பல்லாண்டு - சேந்தனார்

சீரும் திருவும் பொலியச்
சிவலோக நாயகன் சேவடிக்கீழ்
ஆரும் பெறாத அறிவுபெற்றேன்
பெற்றதார் பெறுவார் உலகில்?
ஊரும் உலகும் கழற
உழறி உமைமண வாளனுக்காட்
பாரும் விசும்பும் அறியும்
பரிசுநாம் பல்லாண்டு கூறுதுமே!

## 5. பெரியபுராணம் சேக்கிழார்

இறவாத இன்பஅன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்
பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும்
மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும்நான் மகிழ்ந்து பாடி
அறவாநீ ஆடும்போதுன் அடியின்கீழ் இருக்க என்றார்

# வெள்ளிக்கிழமை

## 1. தேவாரம் - திருநாவுக்கரசர்

அருந்துணையை அடியார்தம் அல்லல் தீர்க்கும்
அருமருந்தை அகல்ஞாலத்து அகத்துள் தோன்றி
வரும்துணையும் சுற்றமும் பற்றும் விட்டு
வான்புலன்கள் அகத்தடக்கி மடவா ரோடும்
பொருந்தணைமேல் வரும்பயனைப் போக மாற்றிப்
பொதுநீக்கித் தனைநினைய வல்லோர்க்கு என்றும்
பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூ ரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவாநாளே

## 2. திருவாசகம்

உருத்தெரியாக் காலத்தே உள்புகுந்து என்னுளம் மன்னிக்
கருத்துஇருத்தி ஊன்புக்குக் கருணையினால் ஆண்டு கொண்ட
திருத்துருத்தி மேயானை தித்திக்கும் சிவபதத்தை
அருத்தியினால் நாயடியேன் அணிகொள் தில்லை கண்டேனே

## 3. திருவிசைப்பா திருவாலியமுதனார்

பவளமால் வரையைப் பனிபடர்ந்து அனையதோர் படரொளி
தருதிருநீறும்
குவளை மா மலர்க் கண்ணியும் கொன்றையும் துன்றுபொற்
குழல்திருச்சடையும்
திவளமாளிகை சூழ்தரு தில்லை யுள்திரு நடம்புரி கின்ற
தவள வண்ணனை நினைதொறும் என்மனம் தழல்மெழுகு
ஒக்கின்றதே

## 4. திருப்பல்லாண்டு சேந்தனார்

பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிட பாற்கடல் ஈந்தபிரான்
மாலுக்குச் சக்கரம் அன்றருள் செய்தவன் மன்னிய தில்லை தன்னுள்
ஆலிக்கும் அந்தணர் வாழ்கின்ற சிற்றம் பலமே இடமாகப்
பாலித்து நட்டம் பயிலவல் லானுக்கே பல்லாண்டு கூறுதுமே

## 5. பெரியபுராணம் - சேக்கிழார்

தூய வெண்ணீறு துதைந்தபொன் மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவரும் சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போல்அன்பு நீர்பொழி கண்ணும் பதிகச் செஞ்சொல்
மேய செவ்வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே..

## சனிக்கிழமை

### தேவாரம் - சுந்தரர்.

கல்தானும் குழையுமாறு அன்றியே கருதுமா கருத கிற்றார்க்கு
எற்றாலும் குறைவில்லை என்பர்காண் உள்ளமே நம்மை நாளும்
செற்றாட்டித் தருமனார் தமர்செக்கில் இடும்போது தடுத்தாட்
கொள்வான்
பெற்றேறிப் புலியூர்ச் சிற்றம்பலத்து எம்பெருமானைப் பெற்றாம்
அன்றே.

### 2.திருவாசகம்

பாடவேண்டும் நான் போற்றி! நின்னையே
பாடிநைந்து நைந்துருகி நெக்கு நெக்கு
ஆடவேண்டும் நான் போற்றி ! அம்பலத்து
ஆடும்நின் கழல்போது நாயினேன்
கூடவேண்டும் நான் போற்றி ! இப்புழுக்
கூடுநீக்கு எனை போற்றி ! பொய்எலாம்
வீடவேண்டும் நான் போற்றி! வீடுதந்து
அருளு. போற்றி! நின் மெய்யர் மெய்யனே!

### 3. திருவிசைப்பா - திருவாலியமுதனார்

இறைவனை என்கதியை என்னுள்ளே உயிர்ப்பாகி நின்ற
மறைவனை மண்ணும் விண்ணும் மலிவான் சுடராய் மலிந்த
சிறையணி வண்டறையும் தில்லை மாநகர்ச் சிற்றம்பலம்
நிறையணி யாம் இறையை நினைத்தேன் இனிப் போக்குவனே

### 4.திருப்பல்லாண்டு - சேந்தனர்

ஆரார் வந்தார் அமரர் குழத்தில் அணியுடை ஆதிரைநாள்
நாரா யணனொடு நான்முகன் அங்கி இரவியும் இந்திரனும்
தேரார் வீதியில் தேவர் குழாங்கள் திசையனைத்தும் நிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியும் ஆடியும் பல்லாண்டு கூறுதுமே.

5. பெரியபுராணம்-சேக்கிழார்

என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட
மன்றுளார். அடியார் அவர் வான்புகழ்
நின்றது எங்கும் நிலவி உலகெலாம்.

திருச்சிற்றம்பலம்

வாழ்த்து

வையம் நீடுக! மாமழை மன்னுக!
மெய் விரும்பிய அன்பர் விளங்குக!
சைவ நன்னெறி தான்தலைத்து ஓங்குக!
தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே!

*-சேக்கிழார்.*

வான் முகில் வழாது பெய்க
மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க;
குறைவிலாது உயிர்கள் வாழ்க!
நான் மறை அறங்கள் ஓங்க!
நல்தவம் வேள்வி மல்க!
மேன்மைகொள் சைவ நீதி
விளங்குக உலகம் எல்லாம் .

*-கச்சியப்பர்.*

வாழி திருமன்றம் கண்ட மலர்க்கண்கள்
வாழி பெருமான் புகழ்கேட்ட வார்செவிகள்
வாழி அவனை வணங்கும் முடிச்சென்னி
வாழிஅவன் சீர்பாடும் வாய்



தங்கள் இல்ல சுபநிகழ்ச்சிகள்
அனைத்திற்கும் மிகக்குறைந்த வாடகையில்
நிறைந்த வசதியுடன் கைராசியான
திருமண மண்டபம்

# ஸ்ரீ செல்வ விநாயகர் திருமண மண்டபம்

புதுப்பேட்டை வடக்குத்தெரு
சிதம்பரம்.

தொடர்புக்கு
**93455 74303**
**97154 13456**

உ



## திருச்சிற்றம்பலம்

தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி
தென்தில்லை மன்றினுள் ஆடி போற்றி
இன்றெனக்கு ஆரமுது ஆனாய் போற்றி




முருகப் பெருமானின் போர்ப்படைத் தளபதிகள்
வீரபாகு உள்ளிட்ட செங்குந்த கைக்கோள நவவீரர்கள்
வீரதீர செங்குந்தர்
வீராந்தக செங்குந்தர்
வீரமார்த்தாண்ட செங்குந்தர்
வீரராகத்த செங்குந்தர்
வீரபாகு செங்குந்தர்
வீரகேசரி செங்குந்தர்
வீரமகேந்திர செங்குந்தர்
வீரமகேசுவர செங்குந்தர்
வீரபுராந்தக செங்குந்தர்
செங்குந்தர் வரலாறு மீட்பு குழு
78269 80901
உருவாக்கம் & வெளியீடு